10th September 1960]

*Temporary establishment (Survey Department)*

* 605 *Q.*—SRI N. R. PALANISAMI (on behalf of SRI V. K. KOTHANDARAMAN): Will the Hon. the Minister for Revenue be pleased to state when the Government propose to revise the scales of pay of the temporary establishments of the Survey Department?

THE HON. SRI M. A. MANICKAVELU: The posts in the temporary establishment of the Survey and Land Records Department are on a fixed pay. The proposal to re-fix their pay is under consideration. Orders will be issued soon after the receipt of the Board's report which has been called for.

SRI R. SRINIVASA IYER: இந்த சர்வே டிபார்ட்மெண்ட் இரண்டு, மூன்று பார்ட்டியில் வேலை செய்கிறது. இதை டெம்பரவரி எஸ்டாபிளிஷ்மெண்ட் என்று தற்காலிகமாகவே 7 வருஷம், 10 வருஷமாக வேலை செய்துகொண்டு வருகிறார்கள். ஐந்து வருஷத்திற்குமேல் அப்படி வேலை செய்கிறவர்களை பர்மனெண்ட் செய்ய உத்தேசம் உண்டா? ஏராளமான பேர்கள் சர்வே செய்யும் வேலையில் ஈடுபட்டிருப்பதனால் இந்த சர்வே எஸ்டாபிளிஷ்மெண்டையே பர்மனெண்ட் செய்வதற்கு உத்தேசம் உண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU: சம்பள கமிஷன் பர்மனெண்டாக இருப்பவர்களுக்கு இருக்கும் சம்பள வீதப்படியே டெம்பரவரியாக இருப்பவர்களுக்கும் சம்பளம் கொடுக்க வேண்டுமென்று சிபார்சு செய்திருக்கிறது. டெம்பரவரியாக இருப்பவர்களை பர்மனெண்ட் செய்யவேண்டும் என்ற பிரச்னை எழவேயில்லை.

SRI N. K. PALANISAMI: பத்து வருஷம் சர்வீசில் இருப்பவர்களை அவசியம் பர்மனெண்ட் செய்யவேண்டுமென்று சம்பள கமிஷன் சிபார்சு செய்திருக்கிறதே. இதில் மூன்றில் இரண்டு பங்கு அம்மாதிரி டெம்பரவரியாக இருக்கிறார்கள். உடனடியாக அவர்களைப் பர்மனெண்டு செய்வதற்கு சர்க்கார் ஏன் நடவடிக்கை எடுக்கவில்லை.

THE HON. SRI M. A. MANICKAVELU: எனக்குத் தெரிந்த வரை சம்பள கமிஷன் சொன்னது பர்மனெண்டாக இருப்பவர்களுக்கு கொடுக்கவேண்டுமென்று இருக்கும் சம்பளத்தை டெம்பரவரியாக இருப்பவர்களுக்கும் கொடுக்கவேண்டுமென்று சிபாரிசு செய்திருக்கிறது.

*Adult Schools*

* 606 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1959-ம் வருடத்திலே நம் இராஜ்யத்தில் எத்தனை முதியோர் பள்ளிகள் இருந்தன?

[10th September 1960

(ஆ) 1960-ம் வருடத்திலே எத்தனை முதியோர் பள்ளிகள் திறக்கப்பட்டன?

(இ) இப்பள்ளிகளிலே எத்தனை பள்ளிகள் இதுவரைக்கும் மூடப்பட்டன?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) to (*c*) On 1st April 1959, there were 1,422 adult schools in the State. On 1st August 1959, the number fell to 1,345. The number of schools in existence after that date is not readily available. No new schools were opened in 1960. The entire policy of opening adult schools in Development Blocks is under review and by an order issued in November 1959, Collectors have been informed that till a final decision is taken on the policy question no new adult schools should be opened in the Blocks.

SRI P. G. MANICKAM: முதியோர் வாசகசாலையை ஏற்படுத்துவதன்மூலமாக ஏதாவது அனுகூலம் ஏற்பட்டிருக்கிறதா? இப்பொழுது இருக்கும் நிலைமை என்ன என்பதைப் பற்றி சர்க்கார் ஒரு அறிக்கை வெளியிடுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: முதியோர் கல்வி விஷயத்தில் எதிர்ப்பார்த்த அளவு பலன் காணோம். சில இடங்களில் வாத்தியார் இல்லாமல் பள்ளிகள் இருக்கின்றன. அதற்குக் காரணம் அங்கு படிப்பவர்களும் சரியாக வருவதில்லை, யாராவது ஒரு உபாத்தியாயரை மாற்றினால் அதற்குப் பதிலாக புதிய உபாத்தியாயர் வருவதில்லை.

SRI S. NAGARAJA MONIGAR: முதியோர் கல்வி பாடசாலை பெயரளவில் முதியோர் கல்வி பாடசாலையாக இருக்கிறதே தவிர, எனக்குத் தெரிந்தவரையில் 18 வயதிற்குட்பட்டவர்கள் தான் படிக்கிறார்கள். ஆகவே வயதை உயர்த்தும் விஷயத்தில் சர்க்கார் ஆலோசனை செய்வார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: வயதுவந்தவர்கள் வந்து படிக்கச் சந்தர்ப்பம் இல்லையென்றால், யாராவது அங்கு படிக்கத்தானே வேண்டும். அப்படி அங்கு யாரும் இல்லை என்றால் வாத்தியார் சும்மா இருக்கவேண்டியிருக்கும்.

SRI N. MARUDACHALAM: 1956–57-ல் முதியோர் பாடசாலைகள் பல இடங்களில் ஏற்படுத்தப்பட்டிருந்தன. இப்பொழுது சில பள்ளிகள் மூடப்பட்டன. மறுபடியும் இந்தப் பள்ளிக்கூடங்களைத் திறந்து நடத்துவதற்கு அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இந்த மாதிரி பள்ளிக்கூடங்களில் வேலை செய்கிறவர்கள், மற்றப் பள்ளிகளில் வாத்தியாராக இருக்கக்கூடியவர்கள். அவர்கள் மாற்றப்பட்டால் அவர்களுக்குப் பதிலாக வரக்கூடியவர்கள் இந்த வேலையை எடுத்துக்கொள்வதில்லை. அதனால் பள்ளிகள் மூடப்படுகின்றன.

SRI K. VINAYAKAM : Sir, it is commonly believed that the money spent on these adult schools is a criminal waste and is spent on a 'dying generation. Do the Government agree with this kind of belief? If so, will the Government desist from wasting this money upon this useless endeavour?

MR. SPEAKER : The hon. Member has used a number of superlatives in his supplementary such as 'criminal waste of money', 'money spent on dying generation', 'useless endeavour' etc. I am of the view that such expressions need not be used in the House.

SRI K. VINAYAKAM : These terms are commonly used in the English language, Sir.

MR. SPEAKER : Yes, I know. Even in the English language, the hon. Member could use milder and gentler expressions. I appeal to the Members not to use such 'superlatives' in the House.

THE HON. SRI M. A. MANICKAVELU : I cannot subscribe to the view that it caters to the needs of a dying generation. I may inform the hon. Member that our Health Department is functioning so well that the average span of life has been raised from 27 to 42.

SRI C. NATARAJAN: இந்த முதியோர் கல்வி பாடசாலைகள் வட்டார வளர்ச்சி திட்டம் இல்லாத இடங்களில் இல்லை. இந்தமாதிரி இடங்களில் கொண்டுவருவதற்கு யோசனை இருக்கிறதா? இதில் ஆண்கள் எத்தனை பேர், பெண்கள் எத்தனை பேர் என்று கணக்கு சொல்லமுடியுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: கணக்கு இப்போது என்னிடத்தில் இல்லை. இது வட்டார வளர்ச்சி திட்டத்தின் கீழ்தான் கொண்டுவரப்பட்டிருக்கிறது.

*Seepage (Lower Bhavani)*

*607 *Q*.—SRI K. R. NALLASIVAM: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) கீழ்ப்பவானி பாசனப் பகுதியில் "கசிவுநீர்ப் பாசனத் திட்டங்கள்" எத்தனை நிறை வேற்றுவதற்குத் திட்டம் முடிவு பெற்றிருக்கின்றன?

(ஆ) பலன் பெறும் நிலங்களின் விஸ்தீரணம் எவ்வளவு?

(இ) முன்பு கீழ் பவானிப் பாசனத்தில் சேராத நிலங்களில் எத்தனை ஏக்கர் இதன்மூலம் பயன் பெறுகின்றது?

(ஈ) தனித்தனியாக ஒவ்வொரு திட்டத்துக்காகும் செலவு தொகை எவ்வளவு?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) to (*d*) The attention of the Member is invited to the paper[a] placed on the table of the House.

---

[a] Printed as Appendix IV on pages 672–673 infra.